[29th September 1958

120 பிள்ளைகளுக்குத் தான் உயர்நிலை பள்ளிகளில் இடம் கிடைத்திருக்கிறது. மற்றவர்கள் வீடு திரும்ப வேண்டியிருந்தது. அதைப் போக்குவதற்கு அரசாங்கத்தினிடம் திட்டம் இருக்கிறதா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இந்தக் கேள்வியில் சில புள்ளி விவரங்கள் கேட்டிருக்கிறார்கள். கல்வி வசதி பற்றி தனியாகக் கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறேன்.

9-10 a.m. Sri N. MARUDACHALAM : பிளாக்கு வாரியாக செய்யப்படும் என்று சொன்னார்கள். எந்த பிளாக்கை முதலில் எடுத்துக் கொள்வார்கள் ? கோயம்புத்தூர் பிளாக்கு எப்பொழுது எடுத்துக் கொள்ளப்படும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : அது அடுத்த வருஷத்திலிருந்து ஆரம்பமாகிறது.

Sri K. B. S. MANI : தோதுவர்கள், நரிக்குறவர்கள், போன்றவர்கள் எவ்வளவு சேர்க்கப் பட்டிருக்கிறார்கள் ? அப்படிச் சேர்க்கப்படவில்லை யென்றால், அவர்களுக்கு ஒரு தனிச் சலுகை காட்டி' தனி ஏற்பாடுகள் செய்து . . . .

Mr. SPEAKER : இந்தக் கேள்வியையே ஒரு தனிக் கேள்வியாகப் போட்டால் நல்லது. (சிரிப்பு.)

Sri. A. V. P. ASAITHAMBI : குழந்தைகள் கல்வி கற்க வேண்டியது ஐந்து வயது முதல் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. அந்த முறையில் கல்வி கற்க தாமதமாகிவிடுவதனால், அந்த வயதை நாலு என்று குறைத்து நிர்ணயிக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM :. புதிதாக ஒரு தத்துவத்தை அங்கத்தினர் சொல்கிறார். அதை அதிகமாக விளம்பரம் செய்து, மற்றவர்கள் ஒப்புக்கொள்ளும்படி செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

*Famine*

* 595 *Q.*—Sri P. U. SHANMUGAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டத்தில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) பஞ்ச நிவாரண வேலைகள் எடுக்க சர்க்கார் ஏதேனும் உத்தரவு பிறப்பித்துள்ளார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Famine conditions are not prevailing in North Arcot district and no area in the district can be said to be affected as such.

(*b*) The rainfall in the district in 1957 having been less than the normal, the Collector has suggested to Government certain relief measures to the ryots this year which are under consideration.

Sri P. U. SHANMUGAM : மழை பெய்யாததால் பஞ்ச நிலைமை இல்லை என்று சொன்னார்கள். அதே சமயத்தில் மழையில்லாததால், பஞ்ச நிலைமைக்கு நிவாரண வேலைகள் செய்யப்படுகின்றன என்றார்கள். அந்த வேலைகள் என்ன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : மழை சரியாகப் பெய்யாவிட்டால் கஷ்டம் உண்டாகும். அதனால் பஞ்சம் உண்டாவதில்லை. ரொம்ப காலத்துக்கு மழையில்லாவிட்டால், பஞ்சம் வரலாம். நிவா

29th September 1958]

ரணங்கள் சம்பந்தமாக, 1367 பசலியில் கடன்களை ஒத்தி வைக்கவும், கால்நடை தீவனத்திற்கு பக்கத்து ஜில்லாக்களிலிருந்து வைக்கோல் முதலியவை வரவழித்து, குறைந்த விலைக்கு விற்பதும், வரி வசூலிப்பதில், தீவிரமாக இல்லாமல், சற்று நிதானமாகவும் இருக்கிறதும், இவையெல்லாம் செய்யப்படுகின்றன.

SRI V. K. KOTHANDARAMAN : சென்ற இரண்டு வருஷ காலமாக மக்கள் அதிக விலை கொடுத்து உணவுப் பொருள்களை வாங்கமுடியாமல், நியாய விலைக் கடைகளை வைக்கும்படி கேட்டும், அந்த ஜில்லாவிலே ஒரு கடையும் வைக்கப்பட வில்லை.

MR. SPEAKER : அங்கத்தினர் அபிப்பிராயம் கொடுக்கிறார். கேள்வியாகக் கேட்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : அந்த பிரதேசத்தில் நியாய விலைக் கடைகளை உடனடியாகத் திறக்க சர்க்கார் முன்வருவார்களா ?

MR. SPEAKER : பதில் இல்லை.

*Training in Madras Flying Club and Sainik Course*

* 596 Q.—SRI P. G MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை விமான கிளப்பிலும், டேராடூனிலுள்ள சைனிக் திட்டத்திலும் 1956–57, 1957–58-ம் ஆண்டுகளிலே பயிற்சிபெற்ற ஒதுக்கப்பட்ட மாணவர்களுக்கும், பழங்குடி மாணவர்களுக்கும் விசேஷ உபகாரச் சம்பளங்கள் கொடுப்பதற்காகச் செலவிடப்பட்ட தொகை எத்தனை ?

(ஆ) 1958–59-ம் வருஷத்திலே மேற்கண்ட பயிற்சிபெற ஒதுக்கப்பட்ட மாணவர்களுக்கும், பழங்குடி மாணவர்களுக்கும் எத்தனை விசேஷ உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*)—

| Amount spent for training in Madras Flying Club. | Amount spent for Sainik Course in Dehra Dun. |
|---|---|
| 1956–57—Rs. 240·75 nP .. .. | Nil. |
| 1957–58—Rs. 382 .. .. .. | Nil. |

(*b*)—

| Madras Flying Club. | Sainik Course, Dehra Dun. |
|---|---|
| Two Non-residential scholarships of the value of Rs. 191 each will be awarded to eligible communities. | One scholarship of the value of Rs. 1,550 will be awarded to eligible communities. |

SRI P. G. MANICKAM : சர்க்கார் நல்ல முறையிலே திட்டங்களைக் கொண்டு வர முயற்சிகள் செய்தாலும், ஹரிஜன மக்களுக்கு அதைத் தெரிவிக்க நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. ஆகையினால், இனிமேலாவது, பிரசாரங்கள் மூலமாக விளம்பரப்படுத்தி, ஹரிஜன மக்களுக்குத் தெரிவிக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தச் சபையிலேயே பலமுறை தெரிவிக்கப்படுகிறது. ப்ளையிங் கிளப் மூலமாகவும் தெரிவிக்கிறார்கள். 1957-58-ல் ஸ்காலர்ஷிப்புகள் கொடுத்து மாணவர்கள் சேர்ந்திருக்கிறார்கள். டேராடூன் ஸ்தாபனத்தாரையும் கேட்டிருக்கிறோம். அவையும் தெரிவிக்கப்படும்.